எனும் பஞ்சாங்கங்களினாலும் நிச்சயம்பண்ணுவாரும் உளர்.

உதாகரணம்.

க. உலகுஒருகர்த்தாவையுடைத்து பட்சம்,
காரியத்தன்மையால் ஏது,
யாதொன்றுகாரியம், அதுகர்த்தாவையுடைத்து-
எப்படி; கடம், திட்டாந்தம்.
அப்படிஉலகிதுகாரியம உபநயம்
ஆகையால், அப்படி உலகிதுகர்த்தாவையுடைத்து நிகமனம்.

உ உலகு ஒருகர்த்தாவையுடைத்து பட்சம்
காரியத்தன்மையால் ஏது
யாதொன்றுகர்த்தாஇல்லது, அதுகாரியமன்று, எப்படி, அமனம்—திட்டாந்தம்.
அல்ல அப்படி இது உபநயம்.
ஆகையால் அல்ல அப்படி இது நிகமனம்.

பிரத்தியட்சானுமானமும் அனுமானானுமானமும் ஆகமானுமானமும் கிரமத்திலே உதாசரித்துணர்த்துகின்றார்

கஉ. போதுசாற்றச்சதாலறிதல்பூர்வக்காட்சியனுமானம்
ஒழுமுறைபாலறிவினளவுணர்கல் கருதலனுமானம்
சிறியான்முற்கன்மபலநிகழ்வை விப்போதிச்செய்தி
ஆதியாகவரும்பயனென்றறிதலுரையாலனுமானம்.

இச்-யம். பூர்வங்கண்டு மோந்த தாழம்பூ மணத்துக்கோத்தமணம் வீசலால், இவ்விடத்திலே தாழம்பூ உண்டென்று, வாசத்தினாலே புட்பத்தை அறிவது பூர்வப்பிரத்தியட்சானுமானமாம்;-முன்னர் சட்சிந்திரியப்பிரத்தியட்சமாகி நின்று, ஆக்கிராணேந்திரியப்பிரத்தியட்சமாய்க் கிருகித்தற்கிடனாய் நின்ற விடயமாகிய தாழம்பூவையே, பின்னரும் ஆக்கிராணேந்திரியப் பிரத்தியட்சமான கந்தத்தால் அனுமித்தலின், பூர்வப்பிரத்தியட்சானுமானமா

யிற்று. ஒரு ஆசிரியன் சாத்திரப் பொருளைப் போதிக்கின்ற முதிர்ந்த வார்த்தையானது மானதப்பிரத்தியட்சத்திற் றோற்றும் முதிர்ந்த புத்திபூர்வமாய் வருதல் கண்டு,- "இவன்முதிர்ந்த புத்திமான்-சாத்திரப்பொருள் போதிக்கும் முதிர்ந்த வார்த்தையைவசனித்தலால்" என்று (வார்த்தை புத்திபூர்வமாய் வருமென்றனுமித்து-வார்த்தையினுயர்ச்சியாற் புத்தியினுயர்ச்சியை அனுமிப்பது) "ஒதுமுறையாலறிவினளவுணர்தல்" அனுமானனுமானமாம்;— வார்த்தையாகிய ஏதுக்கொண்டு மறைபொருளாகிய புத்தியை அனுமித்து, வார்த்தைமுதிர்ச்சியாகிய ஏதுக்கொண்டு மறைபொருளாகிய புத்தி உயர்ச்சியை அனுமித்தலின், அனுமானனுமானமாயிற்று. "பேறிழவின்பமோடுபிணிமூப்புச்சாக்காடென்னும்--ஆறுமுன்கருவுட்பட்டதவவிதியனுபவத்தால--ஏறிடு முன்புசெய்த கன்மமிங்கிதனுக்கேது--தேறுநீயினிச்செய்கன்மமேலுடற்சேருமென்றே." என்பது ஆகமவாக்காதலின்;--இம்மையிலே நிகழ்கின்ற சுகதுக்கபோகங்கள் முறைமையிலே முந்திய சென்மங்களிற்செய்த ஆகாமியங்களிற்றிரண்ட சஞ்சிதத்திற் பொசிப்பான பிராரத்வபலமாம்; ஆனபடியால்,-இம்மையிலே இயற்றும் ஆகாமியகன்மங் காரணமாய் மறுமையிலே சுகதுக்கபோகங்கள் வந்துபொருந்தும்; என்றனுமிப்பது ஆகமானுமானமேன்பர்.

*ஆகமம் இன்னதென்றும் அதன் பகுப்பிலக்கணமிவ்வாறென்றும் உணர்த்துகின்ருர்.*

கச அநாதியேயமலனுயவறிவ்னூலாகமர்தான
சிந்தை மாறின்றிப்பேணறந்திரமந்திரநதான்
பொறிகளடக்கித்தெய்வம்வழிபடும்வாய்மையாகு
சநநிரீறிலாதான்றன்மையுணர்த்துவதுபதேசநதாம்

ஓச்-யம். ஆகமம் என்பது அநாதிமூலமுத்தநாகிய சருவஞ்ஞனது சாத்திரமாம்; அவ்வாகமம், தந்திரகலை, மந்திரகலை, உபதேசகலை, எனமூன்றும்; அவற்றுள், தந்திரகலையாவது சரிதாகிரியாபாதப்பகுப்பாதலால், பின்னேடுமுன்மலைவின்றிச் சரிதாகிரியாகிருத்தியம்போதிப்பதாம். மந்திரகலையாவது, யோகபாதபபகுப்பாதலால், சித்தேந்திரியங்களை அடக்கிக் கடவுளைச்சேபதியானுதிகளால் வழிபடும்முறையைப்போதிப்பதாம். உபதேசகலையாவது உற்பத்திநாசமின்றிச் சுயம்பரமாயிருக்கின்ற கடவுளின் இலட்சணத்தைப்போதிப்பதாம்.

கரு. ஈண்டுபக்கப்போலிநான்கேதுப்போலியொருமூன்று [பான
வேண்டுமெழுமூன்றுகவிளங்குவமைப்போலி யீரொன்
காண்டுந்தோல்வித்தானமிரண்டிருபத்திரண்டாங்கருகிலிவை [கும
ஆண்டுமொழிவரிவையெல்லாமளக்கிலறுபத்தைந்தா

இச்-யம். அனுமானப்பிரயோகஞ் செய்யுமிடத்து பட்சாபாசம்நான்குவரும்; ஏதுவாபாசம்மூன்றும் இம்மூன்றே இருபத்தொன்றும்வரும்; திருட்டாந்தாபாசம் பதினெட்டுவரும். நிக்கிரகத்தானம் இரண்டாயும் இந்த இரண்டே இருபத்திரண்டாயும் வரும்; இவ்வாபாசங்களின் தொகை அறுபத்தைந்து.

முற்றிற்று.